

உ

சற்குருப்யோ நம:.

ஸ்ரீ குமார தேவ சுவாமிகள்

அருளிச் செய்த

# மஹா ராஜா துறவு

---

இது

திருப் பூவண மடாதிபதி

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய

சுவாமிகளாலும்

ஸ்ரீ க. சிவ. மடாலயம் குரு சுவாமிகளாலும்

அச்சியற்றப் பெற்றது.

---


பால சுப்ரமண்ய ஸ்வாமி பிரஸ்,

சென்னை.

1922.

## சிறப்புப்பாயிரம்

திங்களொண் கவிகைத் திகிரியந் திண்
தோட் டிகழ்கடற் றுணைமா ராஜ,னங்கண்மா
நிலத்திற் றுறந்தவீ டடைந்த வரியவிக் கா
தையைத் தமிழா,லிங்குமா தவத்தோ ரிசையு
மென் றிசைப்ப விசைத்தனன் வீடுறக் கேட்
டோர், கொங்கவிழ் பொழில்சூழ் பழமலை
யுறையுங் குமாரதே வென்னுமா முநியே.

சிவன்றிரு வுருவா மைந்து சிந்மய
வெழுத்தும் வாழி, நவந்தரு நீறும் வாழி
நயநகன் மணியும் வாழி, கவின்றருங் குமார
தேவன் கழலிணை யிரண்டும் வாழி, யவன்
றிரு வடியார் தம்மோ டாருயி ரனைத்தும்
வாழி.

---

சற்குருப்யோ நம:

# மஹா ராஜா துறவு

## பாயிரம்.

அமரர்கள் பரவுந் திருமுது குன்றி லாழ
த்துப் பிள்ளையைச் சிகரிக்,குமரசற் குருவை
யிமகிரி ராஜ குமாரியாம் பெரியநா யகியை,
முமலமு மொருங்கே யகற்றிடு முக்கண்முத
ல்வனைச் சாந்தநா யகனை, நமதெணப் படி
யே முடிந்திடத் திநமு நாடிநின் றிறைஞ்சி
வாழ்த் திடுவாம். 1

தொய்யின் முலைக்கோ டிரண்டுகவான்
றுதிக்கை மூன்று விழி தூரிசிற், றுய்ய சைவ
முதன்மதமுந் துலங்க வருமொண் பிடியுலக,
முய்ய வுதவு மொருகளிற்றை யுலவா விரு
த்த சைலத்தில், வையம் பரவு மாழத்து வா
ழைங் கரனை மநநினைவாம். 2

இருட்கலி வலியின் ஞானநன் னெ
றிக ளிறந்துயிர் கொடுநெறி மேவி, மருட்
கொடு கலங்கா வகைகவி யென்றும் வந்தணு

காப்பதி தன்னிற், றெருட்சத்தி கருணை
யுருவதாய் நின்று தெளிவிக்கு மிறைவியெ
ங் குருவோர்,அருட்கடல் பெரிய நாயகி யுல
குக் கனைமுதல் வியைப் பணிந்திடுவாம். 3

திங்களார் சடையிற் கங்கைநீர் துளிப்
பத் திருந்திழை யுமையுளங் களிப்பப்,
பொங்கரா வொடுநற் புலிமுனி வர்கண்மால்
போதய னமரர்கள் போற்றத், துங்கநான்
மறைக டுதித்திட வைந்து தொழில்விரிந்
திடப்பொது வதனிற், செங்கழ லதிர நடஞ்
செயும் பொருளைத் திநம்பணிக் திடரொழி
த் திடுவாம்.

அருளுருவா யுயிர்கடமக் கன்னையாகி
யஞ்ஞானந் தனையகற்றி யமலமாகி,மருளில
தாய் மெய்ஞ்ஞாந மாகுமுத்தி வாய்த்திடவே
காத்தருளி வாஞேரேத்த, இருள்கெடவே
மிளிருமிருங் கழல்களார்ப்ப விறைபுரியுந்
திருநடத்தாற் களித்துவாழுந், தெருண்ம
ருவு மறைநான்கும் பரவுந்தில்லைச் சிவகாம
சுந்தரியைச் சிந்தைசெய்வாம். 5



செக்கர் போன்றொளிர் முக்கட்சி லம்பினை
மிக்க பேரருள் வேலையை யோர்கொம்பாற்
றக்க வன்பர்க்கு தவுந்த ருவினை
இக்க தைநிறை வேறவி றைஞ்சுவாம். 6

கடிகமழ் கரிய கூந்தற் கனிமொழித்
துவர்வாய்த் தெய்வப், பிடி தனக் கோட்டால்
வள்ளிப் பெண்கொடி படருஞ் செய்ய, படி
புகழ் புயமாங் குன்றிற் பாயவண்கழுநீர் நீப,
மடலவிழ் செழுந்தார்ச் செவ்வேண் மலரடி
வணக்கஞ் செய்வாம். 7

வண்டுழா யலங்கன் மாயவன் மலர்மேல்
வதிந்தநான் முகன்மறை யறியாத், தொண்
டைவாய்க் கெண்டை விழிக்கழை மொழி
யொண் டொடியிடை யுமையையோ ரிடத்திற்,
கொண்டகோ னருளைப் பொருளெனக் கரு
திக் குலவிய சாதநந் தரித்து, மண்டிய வடி
யார் யாவர்மற் றவர்தாண் மநத்திநுஞ் சிரத்
திநும் வைப்பாம். 8

சகரர்தம் வலியையுந் தடந்தி ரைக்கட
லகலமும் பின்புளோ ரகழிவி லஞ்சிதான்

புகழுற விளக்கலே போல விச்செயு
டகைசரு கலைஞர்நா றனைவி ளக்குமால். 9

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

தருக்கிளர் நைமி சாரணி யத்திற் றங்
கிய முனிவர்கள் சூதன், வரப்பணிந் தேத்
திக் கதைகள்பற் பலவா வகுத்துரைத் தனை
மஹா ராஜன், திருக்கதை யெங்கட் குரைத்
திலை யதுநீ செப்பெனச் சுருதியிற் சொல்
லுஞ், சுருக்கமில் காதை யிதுவெனத் தொ
குத்துத் தோமறக் கேண்மினென் றுரைக்
கும். 1

குழைத்ததண் சினைத்தே மாவினெண்
கனித்தேன் குலவிய பலவினற் பலத்தேன்,
றழைத்திடு கதலிப் பழமுகுத் திடுதேன்
முன்றிரண் டிலஞ்சியிற் றதும்பி, விழுத்தகு
வயலிற் பாய்தர விளையு மிகுகரு ணைடதே
சந்தா, னிழைத்தநற் றவத்தா லுயிரெலாம்
புரந்தங் கிருந்தர சாளுமோர் குரிசில். 2



மஞ்சம ரிஞ்சிசூழ் மாபு ரத்திருந்
தெஞ்சலி லெண்டிசை யிறைவர் தாடொழத்
தஞ்சமென் றடைந்தவர் தம்மைக் காத்திகல்
வஞ்சகர்க் காய்மஹா ராஜ மன்னனே. 3

தருநிழ லரசு வைகுஞ் சதமகன் றிரு
வின் மிக்கா, னுருவினின் மதனின் மிக்கா
னுலத்தினிற் பலத்த தோளான், செருவினி
லரியே றன்னான் றேனொடு ஞிமிறும் பாட,
முருகுடைந் தொழுகுந் தாரான் மூவுல களி
க்கும் வேலான். 4

அரசர்வந் திடுதிறை யளக்கு முன்றிலான்
முரசுக ளநுதின முழங்கு மன்றலான்
கரைபொரு திரையெறி கடலந் தானையான்
அருவரை மார்பினான் யாளி மொய்ம்பினான்.

அரசர்தம் முடிபுழு தவிருந் தாளினான்
எரிதவழ் திகிரியை யேந்துந் தோளினான்
மருவலர் வலியினை மாற்றும் வாளினான்
றருநிதிக் கொடையினான் றருக்கு நாளினே.

கவரியோ டால வட்டங் காரிகை யா
ர்கள் வீசப், பவளவா யரம்பை யன்னார் பாக
டை யுதவ முத்தத், தவளவா ணகையார்
கீதந் தனிநடஞ் செய்ய நின்று, குவலய
மன்னர் போற்றக் குரைகடற் றானை சூழ.7

இந்திர னால யம்போ விலங்கிய மண்
ட பத்தில், சுந்தர மிருக ராஜன் சுமந்தபூ
வணையின் மீது, வந்திருந் தவனி தன்னை
மநுநெறி முறையிற் காத்தே, யந்தமில் போ
கந் துய்த்தங் கிருந்திடு மரசர் கோமான். 8

தாம்புடைப் பிறையெ யிற்றுத் துத்தி
யீ ராயி ரந்தோட்,பாம்பினாற் பரிக்க லுற்ற
பாரினைப் பரிக்கப் பின்னர், மேம்படு புதல்
வர் நந்தம் வீறுடை வயிற்றில் லென்று,
தேம்படு தெரியன் மார்பன் சிந்தையா குல
ங்களுற்றான்.
9

கங்கையே முதலா மிக்க கடவுண்மா
நதியிற் றோய்ந்தும், பங்கையா சநன்மா றிங்
கட் பவளவார் சடையான் றன்னை, அங்கை
யாற் பூசை செய்து மதிதிகட் களித்துந்



தீயில், பொங்குமா குதிக ளீந்தும் பூவலம்
10
வந்துந் தேவர்.

ஆலயஞ் சாலை யக்கி ராரநந் தநவ நங்
கள், கோலமா றிலஞ்சி கூபங் குளம்பல செ
ய்து மீரெட், டேலுமா தாநத் தோடே யிர
ணிய முதலீ ரைந்து, சாலநற் றாந மீந்துந்
11
தருமமெண் ணான்கு செய்தும்.

தவம்பல புரிந்து வேந்தன் றனையனைப்
பூத்த பின்னர்ப், பவந்தனைத் துடைத்தேன்
மேலாம் பரமநற் பதமு முண்டென், றுவந்
துசா தககன் மத்தோ டொழிவறு கருமமெ
ல்லாம், நவந்தரச் செய்து நாம நன்மஹா
12
ராஜ னென்றே.

வேத நீதியிற் கூறிவி யன்றரா
ஓத வெண்ணெண் கலையுமு ணர்த்துவித்
தேத மற்றகு ரவற்கி ரணியம் [ல்போல்.13
போது மென்னப்பொ ழிந்தனன் கொண்ட

கொடிநெ ருங்குங்கொ டிஞ்சியந் தேர்பரி
கடம லிந்தக யமொண்சி விகையிப்

படியி லூர்ப்ப யிற்றுவித் தாசிலா
வடிவி லங்கும கற்கும ணஞ்செய்வான். 14

மடங்க லன்னப லமுள்ள மாமன்னன் இடங்கொ ளெண்ணெழு தேசத்தி றைவர்க்கு, முடங்கல் போக்கினன் கண்டுமு டிமன்னர் தடங்கொள் சேனைகள் சூழ்வரச் சார்ந்தனர். 15

வடிகொள்வெண் சுதையாற் பித்திகை தீற்றி வானுற மணிக்கொடி நிரைத்துச், கடிநறுஞ் சாந்தங் குங்குமங் ஒன்றாற் கமழ் தாமறுகெலா மெழுகிப், பொடிகொள்சிந் தூரத்தாற் கோலமே புனைந்த பூமலர் பொரி நனி சிதறிக், கொடிகொண்மூ தெயின்மேன் மாடமொண் சிகரி கோதறப் புதுக்கியே குலவ. 16

கதலியுங் கமுகு நட்டுக் காவணம லங்கரித்துப், புதியதோ ரணங்கள் கட்டிப் பொற்குடஞ் செறித்துத் தீபம், இசமுற வெங்கும் வைத்தே யிந்திர னகரம் போல, மதுமலர்த் தாமநாற்றி மாபுரி யலங்கரித்தார். 17



வில்வி லங்குலைக வேந்தர்ம ரபினில்
நல்ல சாமுத் திரிகநூ னன்கதாச்
சொல்வி லக்கணத் தோடுது ரிசிலா
முல்லை மாலைமு ருகுவி ரியவே. 18

மூவுலகதனி லுள்ள முகிழ்முலைக் கருங்கட் செவ்வாய்ப், பாவைய ரெழிலிற் போதன் பகுத்தெடுத் துயிரோ டேய, ஓவியத் தீட்டி ஞனென் றுலகினி லுரைக்கச் செய்ய, பூவுறை திருவி ரும்பும் பொற்புட னவதரித்தே. 19

இலங்கிய வாலொண் டளிர்குழைத் தினிய விருசனக் கோங்கிணை யரும்பி, நலங் கிளராம்பல் குமிழிரு குவளை நண்ணுசெஞ் சரோருகம் பூத்துத், துலங்கிய புயலைச் சுமந் திரு தாளாற் றேமிலா மின்னென நுடங் கிப், பலந்தரப் படருங் கொடியினை வேதப் பண்பினின் மன்றல்செய் வித்தே. 20

அருந்ததி கணவன் முதன்முனி வரர்க ளருமறைக் கிழவர்க டம்மால், பொருந்திய கங்கைப் பூம்புன லாட்டிப் பொன்னவ மணி

களாற் குயின்ற, விருந்திடு மடங்கன் மென்
றவி சேற்றி மிளிர்நவ மணிமுடி கவித்துப்,
பருந்தடர் வேலான் பௌவமார் புவியைப்
பரியெனத் தோன்றல்பா லளித்தான். 21

சோகமே யின்றி யிருந்தனன் வேந்தன்
றோன்றலும் பார்பொது நீக்கி, ஏகமாய்ச்
செங்கோ லெங்கணுஞ் செல்ல வெண்டிசை
விசயமுஞ் செய்தே, மாகநா டென்னப் போ
கமே துய்த்து மடந்தையோ டிருந்தன னெ
ன்றோன், வாகைவே லவன்பி னென்செய்தா
னென்ன மறையவர்க் குயர் முநி வகுக்கும்.

மனைவியும் தானு மோர்நினை வாகி மாறு
பா டின்றியோர் காலும், தனையுணர் யோகி
தந்தையாய் கடவு டங்களை யநுதிந மிறை
ஞ்சி, அனையவ ருரைத்த நெறிதனி னடந்து
மருத்தங்கண் மநதினிற் றறித்தும், வினைய
ம துடனே மூன்முறை யவரை வினவியுஞ்
சிலபகல் போக்கி.
23



தனியிட மதனி விருந்திரு வர்களுந்
தங்களிற் றுமுணர்ந் துசாவித், துனிசெய்
மா மாயைப் பிறப்பது நீங்கிச் சுகமதை
யடைந்தநு திநமும், இனிமைய தாக விரு
க்கலா ஞானத் தென்றெணி ஞாநிகட் சார்
ந்து, நனியவர் பாத பூசனை புரிந்து நாடொ
றும் வினவினர் நன்றாய். 24

இருவரி லரசன் றனக்கறி வோங்க விரு
வகைச் சார்வையு மகற்றிக், கருவுடற் காவ
றனையுங்கை விடுத்துக் கருத்தசை யாது
மெய் யுணர்வை, மருவி டி லகப்பற் றற்று
மேல் வீடு வாய்த்திடு மதற்குமெய்ஞ் ஞா
நக், குருவரு ளின்றி விளங்கிடா தெனவ
கொண்டனன் மநத்தினிற் றுணிவே. 25

மனைதனி லாசை பொருந்தியே நின்று
மகிமையின் ஞாநியா மெனவே, தனைமிக
மதிப்போன் றன்னைவந் தொருவன் றந்திடு
ஞாநமென் றிரந்து, வினவன்மட் டையி
னைப் பருகுவோன் றன்னை வேண்டித்தெ
ன் னம்பழந் தனையே, இனம்பணித் திரி

வோன் புத்திபோன் மெனவே யியம்புவர்
முற்றுணர் பெரியோர். 26

வேதவா கமசாத் திரபுரா ணங்கள் வி
ளங்கவே கற்றுணர்ந் தவற்றைத், தீதற வெ
வர்க்குந் தெளிவுற வோதிச் செப்பிய வந்
நெறி யதனிற், சாதக மிலாத குருவினை
யொருவன் றுனடைந் தாநந்தம் வினவல்,
ஏதமாங் கழுதை தன்னைக்குங் குமத்தி
னியல்புகேட் டிடுதல்போன் மென்றே.27

சீவர்க ளிடத்தி லருள்சிவ பத்தி திருந்
திய துறவுமெய்ஞ் ஞானம், ஆவதோர் வடி
வாம் வேதமா முனியை யமலவா ரணியத்தி
லடைந்தே, தேவர்க டேவே துன்பமோர்
காலுஞ் சென்றிடா முத்திதா னெய்திச்,
சாவதும் பிறப்பு நீங்குமோர் நெறியைச்
சாற்றெனத் தாழ்ந்திட முனிவன். 28

இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி
யிச்சையின் மீட்டதி னினைவு, மொருவியே
யுடற்கா வலையுங்கை விடுத்தே யுட்கா ணங்
கள்ளா தனையும், குருவரு ணெறியே யொடு



க்கிடில் வீடுங் கூடுந்தா னுக்கே பவத்தின்,
கருவழிந் திடுமிந் நெறியைநீ விரைவிற் கை
க்கொண்டு செல்லென வுரைத்தான். 29

அந்நெறி குருவா லையமுந் திரிவு மகன்
றிடத் துணிவதாக் கேட்டு, முன்னெறி யா
ன வரசியற் கையினின் முயன்றனன் சிறிது
நா ளொருநாட், பின்னெறி யதனை நினைந்த
னை வரையும் பெயர்ந்திட விடைகொடுத்தர
சன், மன்னெறிக் கோல மகன்றந்தப் புரத்
தில் வதிந்தன னொருவனுப்த் தனித்தே.()

அரசர்க ளமைச்சர் புரோகிதர் பெரியோ
ரனைவரு மவ்விடத் தேகி, அரசனை நோக்கி
நித்திய கரும மகன்றுவா ளாவிருந் திடுதல்,
அரசிலக் கணமன் றெனவவர் வேண்ட
வவர்களை நோக்கியே வேந்தன், அரசியற்
கையினை வேண்டல னென்னை யறியவே
வேண்டின னன்றே. 31

ஆண்டதோ ரரசு தனிலும்போ கத்து மா
சையற் றேனினி வேண்டேன், மாண்ட
தோர் வநத்தி லொருவனுய்த் தனித்தே

மந்த்தை வறுத்துவீ டடைவேன், பூண்ட
வென் மகமிங் கினித்திரும் பாது போகத்
தைப் பொருளென வெண்ணி, வேண்டல
னீங்க ளரசனு வேறே விதித்துக்கொ ளுங்
கவிளன் றுரைத்தான். 32

ஆதியி லினது தாதையு நினையே யர
சினி னிளமையிற் சூட்டத், தீதின்றியு னது
புயவலி மையினிற் செகமதைத் தாங்கினை
யினிமேல், நீதியி னுசிய மதியினு தாவி
னின்னைப்போ லொருவர்யற் றுளரோ,
ஈதியற் கையதன் றிவ்வுட லுடனே யிச்
செல்வ மன்றிவே றுளதோ. 33

அலதுநீ யேகி னவனியுங் காப்பற் ற
வத்திலே யலந்திடும் யாமும், சலநம திறு
வோமித்தகை யெமைநீ தவிக்கவிட் டேகு
தல் கடனன், றிலகிட வெமக்கீ சருளென
வமைச்ச ரியம்பிட வரசனும் பார்த்தே,
உலக மெய் யெனவெண் ணுறுமதி யுடை
யோர்க் குரைப்பினு முணர்வு தியாதால். 34



இவ்வா சியற்கை யற்பமற் றிதனு லெ
ய்திடுந் துன்பினுக் களவின், றவ்வகை யத
னை யூகமின் மையினு லறிகிலிர் நீங்களின்
பென்றே, எவ்வகை நினைந்தீ ரினியெக்கா
லுங்கட் கிதின்ப மலதெனத் தோன்றும்,
ஒவ்வமற் றிதனுக் கூகமே தோன்று துங்
களுக் குலகயூ குதிக்கும். 35

என்றுமற் றநேக மாவிரித் தாச னெ
டுத்தமைச் சர்கடமக் கியம்பி, நின்றபின்ன
வரை நிலுமென நிறுத்தி நிதிதனும் பொ
ன்மனை விடுத்தே, சென்றபின் னகர வீதி
யி னடக்கத் திரண்டனை வர்களும்பின்
றொடர்ந்து, வன்றுய ரடைந்து வாடியே
மெலிந்து வாரியி னோசையி னழுதார். 36

அவரவர் வினையி னவரவர் வருவா ரவ
ரவர் வினையள வுக்கே, அவரவர் போக மெ
ன்றதே யாயி னுருக்கார் துணையதா குவர்
கள், அவரவர் தேக முளபொழு துடனே
யாதர வாரென நாடி, அவரவ ரடைத னெறி
தன்மத் தடையு மாதர வாதர வாமோ. 37

வினையுள வளவுங் கூடியே நிற்கும் வினையகன் றிடிற்பிரிந் திடுமால், வினையி னால் வருமா தரவினி னியற்கை மெய்யுணர் வத்தனை யலவே, வினையிலை யுங்க ளிடத்தி னானிருக்க மெய்யுணர் வொன்றையே நாடி, வினையறு கானம் புகுதவே வேண்டி விரும் பினே னீர்நிலு மிங்ஙன். 38

என்றுநல் வேந்த னேதிலார் போல வேகின னனைவருங் கண்ணீர், நின்றெதிர் சொரிய வாய்விட்டே யலறி நின்றனர் தமர் கள்பின் னேகி, இன்றெமை யாவர் காத்த ளித் திடுவ ரினியைநீ யேகுத னீதி, அன் றென வுரைத்தா ரவர்களை நோக்கி யரசனீ துரைத்தன னன்றே. 39

உறவாகு மெனவெனை நீர் தொடர்பதி யல் பன்றாகு முயிர்கட் கெல்லாம், உறவாகு ஞாநனி பகையாகு மஞ்ஞாந முய்த்து நோக்கின், உறவான வதையடைந்து பகை பான விதைநீங்கி யொருமை யாக, உறவாத றனக்குத்தா னேயெனமற் றுறவுவிடுத் துறையு மென்றான், 40



தந்தைதா யிருவருந்தம் புதல்வனெனும் வாஞ்சையினாற் றாம்பின் னேகி, மைந்தவா வெங்களிரு வரையுமெவர் காப்பதற்கு வை த்தாய் நீதான், சிந்தைதா னுனக்கெங்கே மகனேயுன் றிருமுகத்தைத் திரும்பிக் காட் டாய், நொந்துதான் பெற்றவயி றெரிகின் றதெனவுரைக்க நோக்கி மன்னன். 41

அறிவைநோக் கிடிலதற்குத் தாய்தந்தை யிலையிவ்டவு லதனை நோக்கில், இறையுநீ ருபாதாந காரணமன் றிருமாயை யினிலுண் டாகும், குறியிதுவிங் சாயின்மண்ணி லெ னைப்பெறு தவரிலையக் கொள்கை நீரு, நிறையுமதி யிலரேநீர் நில்லுமென விருவ ரையு நீத்துப் போனான். 42

அரிவையர்க டமக்கிலக் கணங்கூறு நூலதனி லதனை யெல்லாம், உரிமையதாவு டையவளா மினியமனை தொடர்ந்தேகி யுரு கி நின்று, பரிவினுட னடிகள்பணிந் தாற் றியே பதைபதைத்துப் பனிகண் பாயத், தரியெனுமை விடுத்துலக மதனிலொரு கணமேனுஞ் சாவே னென்றாள். 43

நின்னுடைய நாயகனை நினதுள்ளே
யுறநோக்கி நிற்க மாட்டா, துன்னுடைய
நாயகனென் றென்றனையே கருதிநீ யுழல்
வதென்னே, மின்னனைய விடையாய்கே ள
னவருக்கு நாயகனோர் மேலா மீசன், அன்
னவனை யேதேடிப் போகின்றே னெனவா
சற் கரிவை சாற்றும். 44

ஞானமா னதுபொதுவே நூல்தனிற்
றுறவதற்கு நவில்வ தில்லாள், ஆனமா
தினையல்லவோ விடுகவென வறையும்பதி
யான வுன்னை, ஈனமா விடுகவென வறை
யுமோதா துறவறமிங் கெனக்கென் சொல்
லும், ஆனதா லுமையொழிந்து கதியிலை
யே யெனவெண்ணியா னடுத்தே னென்றாள்.

ஆகமத்தின் விதிதவறு தறைந்தனை நீ
விவேகியே யாவா யானும், தேகமுதற் பிர
பஞ்சமதனினசை விடுத்துவநஞ் செல்லா
நின்றேன், நாகமுலை யாயெனுரை தடுத்த
லுன்றன் விரதமல நாடு தன்னில், போகுதி
யென் றவளை விடுத் தேதிலரைப் போலகன்
று போகா நின்றான். 46



விரிவாய ஞானமதை யுணர்ந்தாலு மட
ந்தைபதி விலங்க நிற்றல், அரிதாய தகை
மையினா லேங்கியே பதைபதைத்து மவனை
நோக்கித், தரியாது கதறியே வினைதனையே
நொந்துதான் றளர்ந்து நின்று, தெரியாது
மறைந்தவிடந் தனின்மிகவு முருகியே
தேம்பி வீழ்ந்து. 47

வேந்தனே யுனைவிடுத்து முலகமதி
விருக்கவோ விதித்தா னீசன், தீர்ந்ததோ
வுமக்கெனக்கும் வினைதானு மின்றளவிற்
சேர்ந்து நிற்கும், போந்தவுமை யெக்காலங்
காண்பேனா னினியெனவே புலம்பி மா
தும், சார்ந்தனள்பின் றிரும்பியே நகரதனி
ன் மாதுலன்றன் சார்பு தன்னில். 48

அரசனந்த நகர்விடுத்துத் தேசநா டுக
ளுமகன் றடவி சென்றே, இரவுபக லகநிலை
யே நிலையாக விருந்தவர்க ளிடமே சேர்ந்
து, பரகுருவி னுபதேசத் தரியபொருள் வி
னவியவர் பகரக் கேட்டுத், திரமநமா யொரு
வராற் கலங்காத ஞானியாய்த் தீரனாகி. 49

நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே
மனைக டோறும், அகமகிழ்ந் தங்கை யேற்
றே யவ்விடத் தருந்தி யாங்கே, செகமு
ளோர் பேயென் றெண்ணிச்சிரித்திட நாண
மின்றி, இகபரத் திச்சை யற்றே யேகனு
யுலாவ லுற்றான். 50

பொருந்திவா ழிடமொன் றாகிற் பொ
ருந்திடும் பற்றென் றெண்ணி, இருந்தில
னோரி டத்து மெங்கெங்கு மொருவ னாகித்,
திருந்திய சமாதி விட்டுத் திரும்பிடா
துறைக்க வுன்னி, இருந்திருந் திடங்களெங்
கு மேகமே நோக்கி நின்றான். 51

தோன்றிடு முலக மெங்கே தோன்றிடு
மென்ன நோக்கித், தோன்றிடு நினைவி லெ
ன்றே தோன்றிய நினைவு தானும், தோன்
றிடு மிடத்தைப் பார்த்துத் தோன்றிடுஞ்
சொரூபத் தென்றே, தோன்றிடும் பொரு
ள்க ளெல்லாஞ் சொரூபமே யென்று கண்
டான். 52



தோன்றிடும் பொருள்க ளுண்டாய்த்
தோன்றியே யின்ப மாகித், தோன்றிடு
மதனு லந்தச் சொரூபமே யென்று கண்டு,
தோன்றிடுஞ் சொரூபந் தன்னிற் றோன்று
மீதசத்தேயென்று, தோன்றிடுஞ் சொரூபந்
தானாய்த் துளக்கமற் றிருந்தான் வேந்தன்.

கடிநகர் தோறுஞ் சென்றுங் கானகந்
தோறுஞ் சென்றும், படிவல மாக வந்தும்
பார்வைமா றாட்ட மின்றி, மடிவிலா மனத்
த னாகி மாசிலா நிலைமை பெற்று, முடி
யுடை வேந்தர் வேந்தன் முத்தியே வடிவ
மானான். 54

முத்தியே வடிவ மான முடியுடை வேந்
தர் வேந்தன், எத்திசை தனக்கும் ராஜ னெ
மைவிட வேறில் லென்று, சத்திய மாக வெ
ண்ணித் தன்னிட மதனிற் றன்னைச், சுத்தி
செய் தனைத்து மாகிச் சுயஞ்சோதி யாகி
நின்றான். 55

தன்னையே யன்றி யொன்றுந் தானுதி
யாவி டத்தின், மின்னையே யொத்த வைய

மித்தைகற் பிதம தென்றும், பொன்னையே
யன்றி வேறு பூடண மிலது போல, என்னை
யே யன்றி யொன்று மில்லெனத் தேர்ந்தா
ன் வேந்தன். 56

உலகினை வேற தாக வுணர்ந்திடிற் பந்த
மாகும், உலகினைத் தானே யாக வுணர்ந்தி
டின் முத்தி யாகும். இலகிடத் தோன்ற லெ
ணில்லா மென்னினை வேயென் றெண்ணி,
இலகிடக் கண்டு வேறற்றிருந்தன னிளமை
வேந்தன். 57

ஏகசக் கரம தாக விருந்தா சாள்வோன்
செல்வப், போகமுந் திரண மாமப்போதநாட்
டரசி யற்கை, யூகபுந் தியினு லாசா னுபதே
சத் தாள வந்தச், சோகமற் றிடுநா ளெய்தித்
தொழிலெலா முடித்தான் மன்னன். 58

பந்தம்வீ டென்று மில்லைப் பரம்பொரு
ளொன்றே யென்றும், தந்தஞ்சங் கற்பத்தா
லே சாலமோ கிப்பந் தியோர், அந்தமா திகளு
மில்லா வரும்பொரு ளுமேயென்று, சந்தத
நோக்கி யந்தத் தற்பரந் தானே யானான். 59





குறைவிலா நிறைவ தாகிக் குளிர்ந்தி
ளைப் பாறி வேந்தன், இறையள வேனுந்
துன்ப மின்றியே யின்ப மாகி, உறைவிட
மின்ன தென்ன வோரிட மின்றி யெங்கும்,
நிறைவதே யிடமாய் நின்றா னிகரின்மா
ராஜன் றானே. 60

எங்குமாய் நிறைந்து நின்ற வேகாச்
சியம தாள்வோன், தங்குத லின்றி யெங்குந்
தானெனக் கண்ட தூயோன், இங்குறைந்
தகன்ற பாண்டத் தியல்பினெஞ் சருவம்
பற்றி, அங்குரு வகற்றி நின்றா னாந்தியாகி
வேந்தன். 61

சீவன்முத் தர்கள்பா னிற்குஞ் செப்
பிய மநத்த ரூபம், மேவரும் பரம முத்தி மே
விடி னுச மாகும், தாவரு நிலைமை நன்றாய்ச்
சற்குரு வருளாற் பெற்றுக், கேவல மாகி
நின்றான் கேடிலா ஞான வேந்தன். 62

இத்தகை ஞானம் பெற்றே யெழின்
முநி யாகி யெங்கும், சித்தனாய்த் திரித றன்

னைச் செப்புமுன் னமைச்சர் தம்முள், வித்தக னொருவன் கேட்டு வினவிட வேண்டு மென்றே, கத்தனு மரசைத் தேடிக் கண்டடி பணிந்து நின்றான். 63

பூவணை யாகி வானம் பொருந்துமேற் கட்டி யாகித், தீவம தாகி யிந்து செங்கதிர் வீசுங் காற்று, மேவுசா மரம தாகி விடுதலை மனைவி யாகிக், கேவல மின்ப மாகிக் கிளர்ச்சியாய் நின்றான் வேந்தன். 64

ரதமுதற் சேனை சூழரதங்களிங் காசனத்தில், விதவலங் காரத் தோடு வீற்றிருந் தமரும் வேந்தன், உதவுகோ வணுய்மேனி யுருத்தெரி யாத நீருய், முதன்முடி விரித்து நின்றான் முனிவனு யொருவ னாகி. 65

கரிரத மிவர்த லின்றிக் கானடை யாகி யெங்கும், உரியதோர் மனையு மின்றி யூரொங்கு முண்பா னாகி, அரியரா சாங்கக் கோல மகற்றியே தவாங்க மாகித், திரியுமவ் வரசை நோக்கிச் செப்பின னமைச்சன் றானே. 66



அவனியி னினக்கு மேலோ ராசனு மில்லை யிந்தத், தவவடி வாகி யெங்குஞ் சரித்திடலெற்றி னுக்கோ, நவமதா யுடவீ தோடே நண்ணுவ தெனையீ தன்றி, இவ ணெனக் கருள வேண்டு மெனக்கறி வோங்கு மாறே. 67

பதத்தினை வேண்டின் முன்னம் பற்றி நின் றில்ல றத்தைப், பதப்பட நிறுத்தி யேகல் பண்பதா-மேலா முத்திப், பதத்தை வேண் டிடிலோ ஞானப் பார்வையிற் கூடு நீயெப், பதத்தினை வேண்டி யிந்தப் பாதேசி யான தென்றான். 68

அமைவுடை யமைச்சின் மிக்கோ யடைவுடன் வினவிக் கேட்டாய், இமையள வேனுஞ் சித்த மிதுவது வெனவோ டாது சமைவுடன் கேணீ சொன்ன சங்கைக்குத் தரங்கணன்றாய், நமைவிடவேறோர் வேந்து நாட்டிலை யென்ப தொக்கும். 69

பதமதை வேண்டி னில்லைப் பதப்பட நிறுத்தி யேகல், இதமென்ற லொக்கு

முத்தி யெய்துதன் ஞானப் பார்வை, வித
மதிற் ஞேன்று மென்றாய் விருப்பமாய்க்
குடும்ப பாரத், திதடதா யழுந்து வோருக்
கெங்ஙனம் பார்வை தோன்றும். 70

மநமிரு பொருளேப் பற்ற மாட்டாதட்
பாவ தாந, இனமவை புறநோக் கான வே
திஞற் கூடும் வீடு, கனவுண்ஞேக் காகு
மில்லங் கருதிய புறநோக் காகும், அநகவிவ்
ஆகந் தோன்ற வறைகுவ நாமே கேளாய்.()

தென்றிசை நடப்போர் கங்கை சென்
றுதோய்ந் திடுவ ரோதான், அன்றியு மவனி
வாழ்க்கைக் கமைச்சர்க ளுடனே காந்தம்,
ஒன்றியே யூகஞ் செய்வா ருலகவேந் தாயி
ஞேர்கள், நின்றிதை நோக்கா யில்லி னிர்ப
வர் முத்தி சேரார். 72

பாசந்தான் பகைய தாகப் பார்வை
பெற்றிடிற்பா சத்தில், பாசந்தான் வைத்
துப் பின்னும் பற்றவுங் கூடு மோதான்,
பாசந்தான் பகைய தென்றே பகருநான்



மட்டே கற்ஞேர், பாசந்தான் விடவு மாட்
டார் பரமெலா மெனவாய்ப் போக்கும். 73

அந்தமா தியுமி லாவீ டடைந்துடற்
பிறப்ப றுக்கச், சுந்தர ஞானம் போதுந்
துறவற மேதுக் கென்றே, மந்ததி காரி
யோரை மதித்துநா லுரைக்குஞ் செய்தி,
அந்தம தான பேருக் கத்தகை விளம்பா
தென்றும். 74

தோன்று கின்ற பொருளியல்புந் தோ
ற்று விக்கும் பொருளியல்பும், தோன்ற
வுனக்கி யாமுரைக்கச் சோக மறவே கேட்
டிடுவாய், தோன்று பொருள்க ளநித்த
முமாய்த் தூய்மை யின்றித் துக்கமுமாய்த்,
தோன்றுந் தோற்று விக்கும்பொருள் சுக
மாய்ச் சுத்த நித்தமுமாம். 75

பால ஞன பருவம்போம் பன்னு குமா
ரப் பருவம்போம், கோல மான தருணம்
போங் கோலே யூன்றிக் குனிந்தெழுந்து, கா
லன் மாய்க்க வனேவர்களுங் கல்லென் றழு

து பேர்மாற்றி, ஏலப் பிணமென் றெரு
பெயரிட் டிடுகொட் டிடித லொருதலையே. 76

கருவி னின்று மழிந்துபோங் கண்ட
குழந்தை யினுங்குமரப், பருவந் தனிலும்
போந்தருணப் பருவந் தனிலு மழிந்துபோ
ம், உருவ நடுங்கு மூப்பதினு மொடுங்கு
மெர்தக் காலையினும், ஒருவி யழித வியல்
பாகு முலகத் துடலின் வாழ்க்கையுமே. 77

பஞ்ச பூத மழிந்துபோம் பாநுத் திங்க
ளுடுக்கள்போம், வஞ்ச வசுரர் மடிந்திடுவர்
மாகர் பதம்போம் வல்லரக்கர், துஞ்சு வார்
கள் போகிபதந் துஞ்சும் பிரமன் பதந்தா
னும், துஞ்சுந் திருமால் பதந்துஞ்சுந் துஞ்
சா தொன்றே பரமபதம்.
78

தோலி ரத்த மெலும்பிறைச்சி சுக்கில
மேதை மச்சையொன்றுய்த், தூலி கரித்த
வுடம்பாகுந் தொட்ட வெவையுந் தன்வடி
வாய்க், கோலி யடக்கிக் கொளுமிதனைக்
கூறு கூறு நோக்காது, போலி யுணர்வோர்
மகிழ்வெய்தும் புனித மென்றும் பரமபதம்.



அரந்தை யதனை யொழுங்காக வறை
யக் கேணீயவனியெல்லாம், பரந்த சிருட்டி
திதியொடுக்கம் பண்பாய் நிகழுஞ் சிருட்டி
தனில், பொருந்து பெரிய துன்பைந்து
போய்மாண்டுறில தெண்ம டங்கே, இருந்த
திதியு மிரண்டாகு மிளமை யென்று மூப்
பென்றும்.
80

விருத்த பருவ மிகத்துன்பம் விளங்கு
மிளமை யிரண்டவையின், வருத்து பிணி
யின் மிகத்துன்பம் வளமை யிளமை மூன்
ருகும், கருத்த தறியாக் குழந்தையென்றுங்
குமார மென்றும் காளை யென்றும், அருத்த
மறியா தசிற்றுன்ப மடையும் பாலப் பரு
வத்தில்.
81

தந்தை தாய ராசிரியர் தாங்கண் முனி
தறனக்கஞ்சிச், சிந்தை கலங்குங்கௌமாரஞ்
சிறந்த காளைப் பருவத்தின், முந்து பசி
நோய் காமநோய் முடுகித் தணிக்கப் பொரு
டேட, இந்தப் புவநத் திரவுபக லிடைய
ருத தொழிற்றுன்பம்.
82

பொருளுண் டாகிற் காப்பதனாற் பொருந்துந் துன்ப மாசாகின், ஒருதம் மிகுத்த வாசரா லுதவுந் துன்ப மொருகுடைக்கீழ், நிருப ளுகி னேய்மாண நேரு மென்னும் பயத்தானும், வருவ தெனையோ மறுமையினி லென்றும் வாடித் துன்புறுமே. 83

மாகர்க் கசுரர் பகையுளது மகிழ்ச்சி வாட்ட மிகவுமுள, தாகத் தகலா நோயுமுள தனங்க ளுளது நசையுளது, போகத் தழுந்தன் மிகவுளது பொன்ற லுளது கற்பத்தே, சோகத் திறங்க விவையுடைய துறக்கத் தென்னை சுகமுளதே. 84

தேவர் மனிதர் துன்பத்தின் றிறங்க ளிவ்வா ருகியிடில், ஆவ கீழா மிருகமுதலசா மீரு மைவகையில், ஓவ வில்லாத் துன்புக்கோ ருவமை யில்லை நிரயத்தில், நோவ துன்பஞ் சொல்வதெனை நோயே பவத்திற் சுகம்வீடே. 85

இந்த விழிவை யுடைய விந்த மாயையசத்தே, அந்த வுயர்வை யுடைய வந்தப்



பிரமஞ் சத்தே, தந்த மநதிற் ரேர்ந்தோர் தள்ளி யெஃதை நிற்பர், உந்தன் மநதி னன்ரு யூகித் தமைச்ச பாராய். 86

பொய்யென் றிதனை யறிந்தோர் பொருந்தி நிற்ப துளதோ, மெய்யென் றதனை யறிந்தோர் மேயா திருப்ப துளதோ, ஐயமுளதோ விதனி லமைச்ச பாராய் நன்ருய், உய்ய வறிவி லாதோ ருழல்வர் நீக்க மாட்டார். 87

பொய்யை மெய்யென் றறிந்து போதமின்மை யாலே, மெய்யைப் பொய்யென் றெண்ணி மெலிந்தே யுழல்வ ருலகர், பொய்யைப் பொய்யென் றறிந்து போத குருவி னருளின், மெய் மெய்யை யென் றறிந்தே மெலிவு தீர்வ ருயர்ந்தோர். 88

துன்பந் தோன்றி லெவருந் துறந்தே காய்த் தனித்தே, இன்பந் தேட லியற்கை யின்ப மென்றே தோன்றில், அன்ப

தாக நீங்கா ரவர்கட் கெங்ஙன் கூடும், நன்ப ரம ஞாந நாட்ட மமைச்ச சொல்லாய். 89

இழிவை யுணர்ந்தா லுயர்வை யெவருந் தேடி நோக்கும், இழிவை யுணரா ருயர்வை யெய்த நோக்கா ரென்றும், இழிவை யிழி வென் றுணர வெந்தக் காலம் வாய்க்கும், இழிவை யுடையோர்க் கமைச்ச விதனை யூகித் துணராய். 90

பேத வாதி களைப்போற் பிரபஞ் சம் வே றெனவே, ஈத கன்ற தலவே யெமை யன்றி யதில் லென்றே, போத விழியிற் றுறந்த புனிதத் துறவே கண்டாய், சீத மதி போற் குளிர்ந்து செநந வெப்பந் தீரும். 91

இருந்த விடத்தி லிருந்தே யெய்த லா மென் றுரைக்கில், திருந்து நிமல மநத் தோர் தீர ரெனினு மொழிந்தே, பொருந்தி யேகாந் தத்திற் போத மடக்க வேண்டும், வருந்து மநத்தோர்க் கென்னை வாய்க்கு மமைச்ச சொல்லாய். 92



முனமே யனைத்து முடித்து முழுது மு ணர்ந்தோ ரில்லின், இனமே சென்று நின் று மேக நீங்கா ரென்னில், திநமே யகமாய் நிற்போர் செகத்தி னொன்றியல்பை யுணரார், கன மாம் யாழ்ப்பா ணத்தின் கப்ப லோட்டம் போல. 93

ஒருத்த ஞொரு ருளனை யொருவேங் தாக்கின் முன்னம், இருக்கு மிடத்தை நீக்கி யேக ராச தானி, இருக்கு மன்றி முன்க ணிருக்கு மோதான் சொல்லாய், திருக்கு ஞாந முடையோர் செகத்தை மெய்யென் றுழலார். 94

மனையினின் றுலும் பொருளுயிர்ச் சார்வின் வருத்தநங் கெடுதலின் மகிழ்ச்சி இனிமையில் வாட்டம் விடயவின் பதனி லெட்டுணை யாயினு மாசை, பினையதிற் றம து பிரவிர்த்தி தானும் பேசுமிந் நான்குமில் லெனினும், தனையுணர் வதற்குச் சாதகஞ்செ யுங்காற் றள்ளியின் னிற்றலே தகுதி. 95

தீதுறு மனையின் பினையிகழ்ந் தந்தச்
செம்பொரு ளின்பமே வேண்டிச், சாதக
மதனிற் றொடங்குசால் விடயந் தடைய
தாஞ் சாத்திய மான, போதினி லவையுந்
தோன்றிடா தந்தப் பொருவிலா நந்தமே
விடவே, ஆதலிற் றுறவின் ஞானமஞ் ஞான 96
மாகுமென் றறைகுவர் பெரியோர்

இல்லற மதனி லுறைந்துளோரிடத்தி
விருப்பினு ஞானங்கீ ழிரும்பில், புல்லிய
மாரத் திநமென விளங்கும் போக்கியில்
வினைத்துற வென்னும், நல்லற மடைந்தோ
ரிடத்துறை ஞான நற்றங்க மிசையிரத் தி
நம்போல், எல்லையி லொளியாய் விளங்கிடு
மாயி னில்சிறப் பன்றுஞா னிகட்கே. 97

முனமனை வர்களு முறைவது மில்ல
முத்தியை யுணர்ந்தறி ஞர்களும், பினமதினி
ன்ற படியினுற் சங்கை பேசுவர் துறவுடை
யோரை, இனமதை விடுத்தில் லறமது வெய்
த விலையென வியம்புவ துண்டோ, மநமதி
னிதனை யூகிநீ யமைச்ச மகிமையன் றில்ல
ஞா னிகட்கே.
98



ஆடிய சகல மடங்குகே வலமு மகற்
றியே யொளிப்படை கொண்டு, மூடிய
விருளை முழுதையும் வீசி முடிவில்வீ டத
னையே யுணர்ந்தோர், நீடிய ஞால மிசையி
னிற் பால னிசமரு ளுடையன்பேய் பிடித்
தோன், கூடிய குணத்தி னுரிற்போய்க்
குடியின் கூலியா லினியல் படைவர்.

வினைகளோ ரிரண்டுஞ் சமமதாய் ஞான
மேவிடு காலையி னிந்த, மனையின்பங் கான்ற
சோற்றிற்கண் டுவர்த்து மாற்றியே கைவிட
வருமேல், தனையுள படியே யநுபவமதனிற்
றுனுணர்ந் தாநந்த மடைந்தோர், பினையு
மவ் விடயம் பூண்பர்க ளெனவே பேசுதல்
வழுங்குமோ சொல்லாய். 100

விடயவின் பதயி னசையுளோர்
தமக்கும் விரிவதாம் பேரின்பச் சுவையின்
அடைவினைச் செவியிற் கேட்டவக் கணமே
யவற்றினை யகற்றிட வருமேல், இடைமுத
லீறின் ஞானவா வந்த மெய்தினோர் களும்
பினு மிந்தக், கடைமனை வாழ்வை நினைவரோ

ளென்ருற் கண்டனர் நகையரோ சொல்
லாய். 101

பற்றிலே யாயி னவையினி விருப்பேன் பழையவூழ் வினையெனி லாசை, சற்றெனு முதிப்பித் தல்லவோ வூட்டுஞ் சகவின்பி லிறையெனு மிச்சை, முற்றுணர் ஞானத் தோர்கள்பூண் பர்களோ முடிவிலா நந்தமே பருகி,நிற்றலே மீட்டும் விழிப்பினுங் கான னிரிற்கண் டுண்முக மடைவார். 102

பவமதை யினிமை யெனவெணி விடயம் பற்றிகின் றுழன்றவர் தாமே, பவமதை யினிமை யலவெணி விடயப் பற்றறுத் தருட்குரு வடைந்து, பவமதை யறுக்கு நெறியுணர்ந் தருளிற்பரவின்ப மடைந்தவர் தாமும்,பவமதை யினிமை யென வெணி னலவோ பற்றுவர் விடயவின் புரையாய். 103

கோடிமுதல் வாடும் வேர்முழு தினை ங் தோதறக் களைந்திடிற் களைந்தும், படி



மிசை கொடிபூ காய்பழ மோங்கல் பகாதி சய மஃதி லை ப்போல், அடிநடு வீறிற் பிரமந்தா னுகி யகப்பற்றை யறுத்தவ ரிடத்தும், மடி வுறு மனையில் விரும்பியே நெஞ்சம் வருத் தன மாதலென் றறைவார். 104

ஆணவ மதனைத் தோய்ந்துட லினைநா நாமெனத் தினவெரி வவையைப், பேண லைச் சுகமென் றுண்மகிழ்ந் திடுவோன் பேரின்பத் தாசைய தாகிப்,பூணவஞ் ஞான மிலை யதின் ஞானம் பொருந்தியச் சொருபந்தா னுகி, ஏணவா நந்தத் தழுந்துவோன் விடய மெய்திடின் ஞானமே யிலையால்.105

கனவதனி லுணர்விலது காணுந்தனு வாதிகளைக் கருதி யேகின்,றுனுமவரி னிது கனவென் றுணர்ந்தவர்க ணசையிலதினு கு தன்னில் தனதுசய வுருவதனை யநுபவத் திற் றூனுணர்ந்திச் சகம தெல்லாம், மநமத னிற் சாலமென வுணர்ந்தவரிவ் வுலகின்பின் மைய னீங்கும். 106

கதிரவன்முன் னிருளிருக்கு நயன
முடை யொருவன்குழிக் கண்ணே வீழும்,
அதிகவலிச் சூரனமர்க் களக்குவெரு வுவன்
கிருத நறையக் காரம், இதமுளபா யசமு
ணிரம் பருந்தினன்கூழ் தனிற்செய்வ னிச்
சை யென்றால், விதமிவைநான் கினுக்குங்
குறை யதின்ஞாநிக் கிழுக்காகும் விட
யஞ் சென்றால். 107

இங்குறைந்த பாண்டமதன் வாதனை
யில் வாதனைக ளிருக்குமென்றல், துங்க
வறி வுடையோர்கட் கின்றியமை யாததொ
ழி றொடங்கி நிற்றல், அக்கியைத்தம் பநம்
வல்லார்க் கனல்சுடா ததின்வினைக ளடுக்கா
தென்றல், தங்கும்வினைக் கேதுவாம் விட
யமதில் விருப்பாதி சாரா தென்றல். 108

உணர்வுடைய ஞாநியெவை புரிந்தி
டினு மிழிவிழி வுரைத்த தாகின், இணையி
லிரு தீயனென்பர் யூகமில வதனுன்மற் றெ
வைகள் செய்தும், அணைவதிறாழ் வெனு
மவனே தீயன்மிக ஞானமதற் காகுந் தாழ்



வா, னணுகினன்றோ ஞாநமொரு வனை
ஞாநி யெனப்பெயரு நண்ணி நிற்றல். 109

கருவயிற்றை யுடையதுவுங் கனவயிற்
றை யுடையதுவுங் கருதிப் பெண்ணின்,
உருவதனைக் குறிப்பதினோக் கிடிற்றோன்று
முளபடியே யுலகு தன்னில், குருவையடைந்
தவனருளிற் சொரூபத்தை யநுபவமாக்
குறித்தி ளோரும், இருவையத் திடம்பமாய்த்
தமைஞாநி யென்போரு மேதிற் றோன்
றும். 110

அருச்சுநற்கு மிராமருக்கு மதிகார
மவைபார்த்தே யறைந்த நூலின், கருத்தறி
யாய் ஞாநமொன்றே பிரமாணஞ் சரிதை
யது கணக்கன் றாகும், விருத்தமறி வாசார
முடையோனே ஞாநியில்லோன் விருத்த
னாகும், திருத்தமுட னமைச்சவிது துணி
வென்றே யுட்கொள்வாய் தீர னாகி. 111

என்றங் கநேக மாய்விரித்தே யிராச
யோகி யுரைசெய்து, நின்று வாக்குத் தனை
யடக்கி நிமிடத் தகற்றி மநத்தினையும்,

ஒன்று மில்லா வெறும்பாழா யொன்றுஞ் சமாதி தனையடைந்தான், நின்றங் கமைச்ச னிதுகண்டிங் நேர்மை புதிதென் றதிசயித் தான். 112

இந்த வுணர்வு நமக்கின்ன மெய்த வில்லை நாமிங்கே, எந்த வுணர்வு கொடுநிற் பே மென்ன வமைச்சன் யூகித்து, வந்த வழியே தான்திரும்பி வளப்ப முடைய மாபுரிக்கே, பந்த முடையோ ருடனிருந்து பகர்ந்தா னரச ளியற்கையெல்லாம். 113

கேட்ட பேர்கண் மிகவியந்து கிட்டா தென்று மிம்முனிபோல், தேட்ட முடனே யவரவர்க டேடி வந்து பணிந்திடவும், வாட்டமுடனே தாய்தந்தை மனையாள் பதத்தில் வீழ்ந்திடவும், நாட்ட மாறு பாடின்றி நகை செய் திருந்தா னற்றவனே. 114

வந்த பேர்க ளுடன்வார்த்தை மலரா திருப்ப தவாறிந்து, பந்த முடையே னமக் கென்னை பகர்ந்தாற் றேன்று மெநத்திரும்பித், தந்த மிடத்திற் சென்றார்க டவனுஞ்



சிறிது நாட்கழித்துத், தொந்த மொன்று மில்லாத சுயமா முத்தி தானுனன். 115

இந்தமா ராஜன் சென்ற விதிகாசந் தனைப்ப டிப்போர், சிந்தனை யொன்று மின் றித் தீரவே துறவ ராகி, அந்தமு மாதி யில் லா வமலமே வடிவ மாவர், எந்தமை யருளி ளுண்ட வெழிற்குரு பரையே வாழி. 116

அரியது துறவற மல்ல தில்லையான்
மருவிய துறவற மொருவி மன்னனுப்
உருகெழு முடிகவித் துலக மாள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக்கீதலே.

மஹா ராஜா துறவு-முற்றுப் பெற்றது,

பாயிர முள்பட-ச் செய்யுள் 126.

சர்வஞ் சிந்மயம்.

---